Regd. No. TN-MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G o-TN-Ms C. P. P. 55



**வன்முறை**

இருபக்கமும் கூர்மை பொருந்திய கத்தியைப் போன்றது வன்முறை. தூண்டி விடுவோரையே அது பதம் பார்த்து விடும்.

—பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**போற்றுதல்**

பிறப்பதும், மறைவதும் இயற்கை. ஆனால் மக்கள் போற்றத்தக்க வகையில் காரியமாற்ற வேண்டும்.

—தந்தை பெரியார்



மலர் : 9 சென்னை 18-4-1985 வியாழன் ★ ★ ★ வெளியூர் 19-4-1985 வெள்ளி இதழ் 180

## காந்திகிராம பல்கலை கழக வேந்தராக ஆர். வி. தேர்வு

புதுடெல்லி, ஏப். 18— காந்தி கிராம பல்கலைக் கழக வேந்தராக துணை ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன் ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

3 ஆண்டு காலத்திற்கு அவர் இப்பதவியில் இருப்பார்.

### தனுஷ்கோடி ஆதித்தன் "மாபெரும் வெற்றியை" பெற்றிட வேண்டும் என்ற-

### புரட்சித்தலைவரின் வேண்டுகோள் கேட்டு கழகத்தோழர்களிடையே ஆவேச உணர்வு

# இரவு பகலாக தேர்தல் பணி

## நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் விரைகிறார்

### திருச்செந்தூரில் தீப்பொறி பறக்கும் பிரச்சாரம்

திருச்செந்தூர், ஏப். 18- திருச்செந்தூர் நாடாளுமன்றத் தொகுதி இடைத்தேர்தலில் புரட்சித்தலைவரின் ஆணையை ஏற்று கழகத் தோழர்கள் தங்கள் முழு சக்தியையும் பயன்படுத்தி பிரச்சாரம் செய்து வருகிறார்கள்.

நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் நாளை(வெள்ளி)முதல் தொடர்ந்து பிரச்சாரம் செய்கிறார்.

திருச்செந்தூர் நாடாளுமன்றத் தொகுதியில் இ காங்கிரஸ் வேட்பாளர் தனுஷ்கோடி ஆதித்தன் மாபெரும் வெற்றியைப் பெறத் தக்க வகையில் கழகத் தோழர்கள் பிரச்சாரம் செய்ய வேண்டுமென்று முதல்வர்புரட்சித் தலைவர் வேண்டுகோள் விடுத்திருந்தது தெரிந்ததே.

புரட்சித் தலைவரின் உருக்கமான வேண்டுகோளைத் தொடர்ந்து வெளி மாவட்டங்களில் இருந்தெல்லாம் ஏராளமானகழகத் தோழர்கள் திருச்செந்தூர்தொகுதிக்கு அலை அலையாய் வந்து சேர்ந்த வண்ணம் உள்ளனர்.

### தீவிர பிரச்சாரம்

நெல்லை, குமரி ஆகிய இரு மாவட்டங்களிலும் பரந்து விரிந்து கிடக்கும் திருச்செந்தூர் நாடாளுமன்றத் தொகுதி முழுவதிலும் கழகத் தோழர்களும், தோழமைக் கட்சியினரும் தீவிரமாகப் பிரச்சாரம் செய்து வருகிறார்கள்.

தேர்தல் பணிக் குழு பொறுப்பாளரான செ.அரங்கநாயகம்துணை பொறுப்பாளர் கருப்பசாமி பாண்டியன் ஆகியோர் எல்லாப்பகுதிகளுக்கும் சென்று கழக அணியின் பிரச்சாரத்தை முறைப்படுத்தி வருகிறார்கள்.

நிதியமைச்சர் டாக்டர் நாவலர் நாளை(வெள்ளிக் கிழமை)முதல் 22-ந்தேதி வரை தொகுதியிலேயே முகாமிட்டு பிரச்சாரம் செய்ய இருக்கிறார்.

### முறையான பணிகள்

மற்ற அமைச்சர் பெருமக்களும், கழக முன்னணியினரும் தேர்தல் பணிக் குழுவினரும் முறை வகுத்து செவ்வனே தேர்தல் பணிபுரிந்து வருகிறார்கள்.

இ.காங்கிரஸ் தலைவர்களும், தொண்டர்களும் மறறும் கா. கா. தே. கா உள்ளிட்டதோழமைகட்சியினரும் ஒருங்கிணைந்து தேர்தல் பணி புரிந்து வருகிறார்கள்.

### முதல்வர் வேண்டுகோளை நிறைவேற்ற...

சாதாரண வெற்றி கிடைத்தால் மட்டும் பயனில்லை. புரட்சித்தலைவர் கேட்டுக்கொண்டபடி 'மாபெரும் வெற்றியை' கழக அணி பெற்றிட வேண்டுமென்ற முனைப்புடன் கழகத் தோழர்கள் கண் துஞ்சாது, பசி நோக்காது பாடுபட்டு வருகின்றனர்.

## நடிகை ரேணுகா மரணம்

சென்னை, ஏப், 18— முந்தானைமுடிச்சு, இளங்கன்று, நவக்கிரக நாயகி, நான் சிவப்புமனிதன், கல்யாண அகதிகள் உள்ளிட்ட பலபடங்களில் நடித்தவர் ரேணுகா.

இவர் சிறிது காலம் உடல்நலமின்றி இருந்தார். இன்று அதிகாலை ரேணுகா இயற்கை எய்தினார். உடல் தகனம் மயிலாப்பூர் இடுகாட்டில் நடைபெற்றது. சிதைக்கு அவரது கணவர் சேஷாத்திரி தீ மூட்டினார்.

இறுதி ஊர்வலத்தில் ஏராளமான நடிகர் நடிகைகள் மற்றும் திரையுலக பிரமுகர்கள் பங்கேற்றனர்.

★★

## மத்திய அரசு ஆலோசனைக் குழு: அண்ணா நம்பி தங்கபாலு நியமனம்

புதுடெல்லி, ஏப்.18— மத்திய அரசின் காமர்ஸ் அண்டு சப்ளை இலாகாவிற்கு ஒரு ஆலோசனைக் குழு அமைக்கப்பட்டுள்ளது இக்குழுவுக்கு மத்திய அமைச்சர் விஸ்வநாத் பட்டேல் சிங் தலைவராகவும், துணைஅமைச்சர் பி.ஏ.சங்மா மற்றும் மத்திய துணை அமைச்சர்கள் குலாம்நபி ஆசாத், மார்க்கரெட் ஆல்வா ஆகியோரைக் கொண்ட குழு அமைக்கப்பட்டுள்ளது. இக்குழுவில் தமிழகத்தைச் சேர்ந்த கழக எம்.பி. அண்ணா நம்பியும், இந்திரா காங்கிரஸ் எம்.பி. தங்கபாலுவும் நியமிக்கப்பட்டுள்ளனர்.

### புரட்சித்தலைவர் பற்றி மோசடி படங்களை வெளியிட்ட

# கருணாநிதியின் எடுபிடி ஏடுகள் மீது வழக்கு

### அமைச்சர் ஆர். எம். வீ. தகவல்

சென்னை, ஏப் 18- முதல்வர் புரட்சித் தலைவர் அமெரிக்காவில் சிகிச்சை பெற்ற போது, மோசடியாக படங்களை வெளியிட்ட முரசொலி, தினகரன், எதிரொலி ஆகிய பத்திரிகைகள் மீது வழக்கு தொடரப்பட்டுள்ளதாக அமைச்சர் ஆர். எம். வீ கூறினார்.

முதல்வர் புரட்சித் தலைவர் அமெரிக்காவில் நியூயார்க் மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுவந்தபோது அவருடைய படத்தை தமிழக அரசு செய்தித் துறை வெளியிட்டது.

அந்த படங்கள் உண்மையான படமல்ல; மோசடி என்று செய்தி வெளியிட்டு, படங்களையும் மோசடியாகத் தயாரித்து வெளியிட்ட முரசொலி மாறன் மீதும், தினகரன், எதிரொலி மீதும் போலீசார் வழக்கு தொடர்ந்துள்ளனர்.

கடந்த 12ந்தேதியன்று இந்த வழக்கு தலைமை மெட்ரோ பாலிடன் மாஜிஸ்டிரேட் முன்பு தாக்கல் செய்யப்பட்டுள்ளது. 120பி 469 ஐ.பி.சி. செக்ஷனின் கீழ் வழக்கு தாக்கல் செய்யப்பட்டுள்ளது. முரசொலி பத்திரிகையின் ஆசிரியரும், வெளியிடுபவருமான மாறன், தினகரன் ஆசிரியரும் வெளியிடுபவருமான கேசவன், தங்கராஜ், எதிரொலி பத்திரிகையின் ஆசிரியர் வெளியிடுபவர்களான சிங்கமுத்து அரு. குமார், ஆகியோர் மீது வழக்கு தொடரப் பட்டுள்ளது.

அமைச்சர் ஆர். எம். வீ. மேற்கண்ட தகவல்களை நிருபர்களிடம் கூறினார்.

### தனியார் பொறியியல்

## கல்லூரிகளில் வெளிமாநில தமிழர்களுக்கு இடம்

திருச்சி. ஏப். 18— தமிழகத்திலுள்ள தனியார் பொறியியல் கல்லூரிகளில் வெளி மாநிலத்தை சேர்ந்த மாணவர்களுக்கும், அயல் நாடுகளில் வசிக்கும் தமிழர்களுக்கும் இட ஒதுக்கீடு செய்வது குறித்து அரசு பரிசீலித்து வருவதாக அமைச்சர் அரங்க நாயகம் கூறினார்.

★★

## தர்மபுரி மாவட்ட கழக கூட்டம்

கிருஷ்ணகிரி, ஏப். 18- தர்மபுரி மாவட்ட கழக ஆலோசனைக் கூட்டம் வரும் 19ந்தேதி மாலை 2-மணிக்கு தர்மபுரி விவேகானந்தா நகர மாளிகையில் எச்.ஜி.ஆறுமுகம்எல்எம்ஏ தலைமையில் நடைபெறுகிறது.

அனைவரும் வருகை தருமாறு மாவட்டச் செயலாளர் கே.ஆர். சின்னராசு எம்.எல்.ஏ.கேட்டுக் கொண்டுள்ளார்.

### ஏழை மீனவர்கள் வயிற்றிலடித்து பணத் திமிங்கிலங்கள்பணம்சேர்க்கும் நிலை தவிர்க்க

# இறால் ஏற்றுமதியை அரசே மேற்கொள்கிறது

### அமைச்சர் கோவேந்தன் தகவல்

சென்னை, ஏப். 18- இறால் - தவளை போன்றவைகளை அரசே கொள்முதல் செய்து ஏற்றுமதி செய்ய அரசு ஆராய்ந்து வருகிறது இதன்மூலம் ஏழை மீனவர்கள் இடைத்தரகர்களால் ஏமாற்றப்படுவது ஒழிக்கப்படும் என்று அமைச்சர் கோவேந்தன் கூறினார்.

அமைச்சர்கோவேந்தன் நிருபர்களிடம் கூறியதாவது:—

தமிழ்நாட்டில்ஏறத்தாழ 14 லட்சம் மீனவர்கள் தொழில் செய்து வருகின்றனர்.

மீனவர்கட்கு ஒரு வட்டத்திற்கு ஒரு சங்கம் என்ற அடிப்படையில் கூட்டுறவு சங்கங்களை அமைக்க அரசு பரிசீலித்து வருகிறது.

மீன் வளர்ச்சி மேம்பாட்டு குளங்களின் குத்தகைக்காலத்தை 10 ஆண்டில் இருந்து 3 ஆண்டாக குறைத்து அதன் மூலம் உள் நாட்டு மீன

(1-ம பத்தி பார்க்க )

(7-ம் பத்தி தொடர்ச்சி) வர்களின் கடனை குறைக்க அரசுபரிசீலித்து வருகிறது.

அந்நிய செலாவணியை ஈட்டும் பொருட்டு தமிழ்நாடு மீன்வளர்ச்சிக் கழகத்தின் மூலம் இறால், தவளை போன்ற ஏற்றுமதிப் பொருட்களை பெருமளவில் அரசே கொள்முதல் செய்ய திட்டமிட்டுள்ளது.

விரைவில் முதல் கட்டமாக 10 இடங்களில் இறால் கொள்முதல் பணி ஆரம்பிக்கப்பட இருக்கிறது.

இறால் ஏற்றுமதி மூலம் தனியார்கள் ரூ.30 கோடி அளவுக்கு லாபம் சம்பாதிக்கிறார்கள்.

இடைத் தரகர்களை ஒழித்து ஏழை மீனவர் பயனடைய இறால்போன்றவைகளை ஏற்றுமதி செய்ய அரசு பரிசீலித்து வருகிறது.

### மீனவர் ஆலோசனைக் குழு

மீனவர் நல்வாழ்வுக்கான ஆலோசனைகளை அரசுக்கு எடுத்துக் கூற மாநிலஅளவில்உள்நாட்டு மீனவர் ஆலோசனைக் குழு ஒன்றும், கடல் மீனவர் ஆலோசனை குழு ஒன்றும் விரைவில் நியமிக்கப்பட இருக்கிறது.

இக்குழு அமைக்கப்படும் நாளில் இருந்து 3 மாதங்கட்குள் அரசுக்கு அறிக்கை அளிக்கும்.

ரூ. 15.13 கோடி செலவில் சென்னை, தூத்துக்குடி, கடலூர், நாகப்பட்டினம், மல்லிப்பட்டினம், கோடியக்கரை ராமேஸ்வரம், மண்டபம் ஆகிய 8 இடங்களில் பெரிய சிறிய மீன்பிடித் துறைமுகங்கள் கட்டப்பட்டுள்ளன.

ஆக ரூ.19.5 கோடி செலவில் 13 சிறிய பெரிய துறைமுகங்கள் மூலம் 1,739 விசைப்படகுகளும் தாவாய்களும் தங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

தமிழ்நாடு மீன்வளர்ச்சி கழகத்திற்கு மீன் வலைகள் பின்னும் இயந்திரம் ரூ.35 லட்சம் மதிப்புள்ளவற்றை ஜப்பான் இலவசமாக தர முன் வந்துள்ளது.

ராமேஸ்வரம் கடல் பகுதியில் தமிழக மீனவர்களைப் பாதுகாக்க இரவு 8 மணிமுதல் காலை 6 மணிவரை ரோந்துக்கு ஆவன செய்யுமாறு மத்திய அரசை தொடர்ந்து வற்புறுத்தி வருகிறோம்.

இவ்வாறு அமைச்சர் கோவேந்தன் கூறினார்.



## புண்ணிய புருஷர் புரட்சித்தலைவர் புகழ்பாடுவோம்!

## புண்ணியபூமியாம் செந்தில்பதியில் வெற்றிக்கொடி நாட்டுவோம் !!

# புரட்சித்தலைவர் மருத்துவ செலவு நிதி

முதல்வர் புரட்சித்தலைவர் மருத்துவச் செலவு நிதிக்காக தலைமைக்கழகத்திற்கு வந்துள்ள நிதி விவரம் வருமாறு.

| | ரூபாய் |
|---|---|
| திரு எஸ் எம் அலாவுதீன், மேலப்பாளையம் | 10 |
| திரு கந்தையாத்தேவர், மேலப்பாளையம் | 10 |
| அய்யம்மாள், ராம்நகர் | 10 |
| திரு கே பன்னீர்செல்வம், திண்டிவனம் | 10 |
| திரு கே வாசு, பெரம்பலூர் | 10 |
| திரு பி பெரியசாமி, பெரம்பலூர் | 10 |
| திரு ஆர் பழனிசெட்டி, திண்டிவனம் | 10 |
| திரு எம் சப்பாணி, ஆம்பூர் | 10 |
| திரு ந. அருணாசலம், பண்ணைபுரம் | 10 |
| திரு டி. மணிப்பிள்ளை, துறையூர் | 10 |
| திரு பி கே ஈஸ்வரமூர்த்தி, திருச்செங்கோடு | 10 |
| திரு பி ஆர் காளிமுத்து, திண்டுக்கல் | 10 |
| திரு என் ராஜசேகர் பண்ருட்டி | 10 |
| திரு என் ஜெயராஜ் மதுரை | 10 |
| திரு பி சீனிவாசன் காரைக்குடி | 10 |
| திரு புலவர் சாகுல் அமீது மேலப்பாளையம் | 10 |
| திரு ஏ லிங்கராஜ் தூத்துக்குடி | 10 |
| திரு டி சிவராமகிருஷ்ணன் தூத்துக்குடி | 10 |
| திரு ஆர் சுப்ரமணியன் தூத்துக்குடி | 10 |
| திரு ஆ ஹூமிக்கேல் தூத்துக்குடி | 10 |
| திரு சி ஸ்டீபன் தஞ்சை | 10 |
| திரு டி ஏ விஜயசுதா தஞ்சாவூர் | 10 |
| திரு என் பக்தவச்சலம் நெய்வேலி | 10 |
| திரு மு இரத்தினதேசிகன் திருவாரூர் | 10 |
| திரு எம் மொய்தீன் நாகூர் | 10 |
| திரு வி மணிவண்ணன் புலியூர் | 10 |
| திரு எம் எஸ் மணி மேட்டூர்அணை | 10 |
| திரு மா ஜெபமாலைநாதன் மேட்டூர்அணை | 10 |
| திரு கே பிச்சை ஆயிரம்விளக்கு | |
| திரு வி மாதையன், கொண்டலாம்பட்டி | 10 |
| திரு வி காளியப்பன், கொண்டாலம்பட்டி | 10 |
| திரு வி பெருமாள் தம்மநாயக்கன்பட்டி, | 10 |
| திரு ஏ ஆறுமுகம், பெரம்பூர் | 10 |
| திரு அ சேக்ஜபரவி, சாட்டுமன்னார்குடி | 10 |
| திரு எஸ சுப்பையன், சித்தமல்லி | 10 |
| திரு மு தேவராசன், கருங்குழி | 10 |
| திரு வீ அழகர் அம்பலம், தேனி | 10 |
| திரு ஏ முத்துகிருஷ்ணன் கூரைநாடு | 10 |
| திரு எஸ் பாலசுப்பிரமணியன் சீர்காழி | 10 |
| திரு டி வீரையன் தப்பளாம்புலியூர் | 10 |
| திரு டி தட்சிணாமூர்த்தி | 10 |
| திரு எஸ் சேஷாத்திரி | 10 |
| திரு ஆர் சிவராமன் தப்பளம் புலியூர் | 10 |
| திரு கே எஸ் ராஜாமணி செந்துரை | 10 |
| திரு எம் எஸ் குணசேகரன் மன்னார்குடி | 10 |
| திரு மு சின்னதுரை காயப்பட்டினம் | 10 |
| திரு ஏ இளங்கோ ஆத்தூர் | 10 |
| திரு ஏ இராதாகிருஷ்ணன் சங்ககிரி | 10 |
| திரு எம் ராஜசேகரன் வேலூர் | 10 |
| திரு எஸ் சுப்பிரமணி சென்னை | 10 |
| திரு எம் கிருஷ்ணசாமி ரெட்டி | 10 |
| திரு பி கே சுப்பிரமணியன், மதுரை | 10 |
| திரு ஏ ஜேம்ஸ் நத்தம் மதுரை | 10 |
| திரு எஸ் சின்னதம்பி பாளையம் | 10 |
| திரு இரா இருதயராஜ், மதுரை | 10 |
| திரு ஆர் கோவிந்தராசு, விழுப்புரம் | 10 |
| திருமதி எஸ் லீலாகோபால், அரும்பாக்கம் | 10 |
| திருமதி கருப்பாயியம்மாள், நத்தம் | 10 |
| திரு ஓ ஏ எம் முகமதுசுபு ஹாணி, மேலப்பாளையம் | 10 |
| திரு கே கணேசன், நீலகிரி | 10 |
| திரு டி பூபதி திருச்செத்தூர் | 10 |
| திரு எம் தர்மர் குமரி | 10 |
| திரு எஸ் கே சுப்பையா, கழுகுமலை | 10 |
| திரு டி கே பாலசுப்ரமணியம், கோவை | 10 |
| திரு சுப்ரமணியம், திருப்பூர் | 10 |
| திருமதி பி குணசீலி | 10 |
| திரு மு ப முத்துக்குமார், களக்காடு | 10 |
| திரு கு வேலவன், போடி | 10 |
| திரு ஏ கே அபூபக்கர், மேலப்பாளையம் | 10 |
| திரு ஓ ஒய் ஜபகுள்ளா, நெல்லை | 10 |
| திரு ஆர் இராமச்சந்திரன், இடைப்பாடி | 10 |
| திரு பி மாணிக்கம் இடைப்பாடி | 10 |
| திரு ஏ எஸ் ராஜு, நீலகிரி | 10 |
| திரு கே பி தாமோதரன் கொக்கலூர், | 10 |
| திரு எஸ் ஆர் சுத்தரேசன் அத்துமாஞ்சேரிபட்டி | 10 |
| திரு ஜி எம் கோபால், திருத்தணி | 10 |
| திரு டி முருகன் நெல்லை | 10 |
| திரு ஒய் சுந்தரம், புத்தேரி | 10 |
| திரு எஸ் காசியா பிள்ளை, நெல்லை | 10 |
| திரு கே கணி, மறவமங்கலம் | 10 |
| திரு வி எஸ் சேத்தையகவுடர், தேவராபாளையம் | 10 |
| திரு செல்லம்மாள், பொள்ளாச்சி | 10 |
| திரு வி எஸ் அங்கப்பன், ஊஞ்சலூர் | 10 |
| திரு பி அர்சுனதேவன், கும்பகோணம் | 10 |
| திரு இராஜபாண்டியன் பரமக்குடி | 10 |
| திரு பி பி பிலிப், அம்பாசமுத்திரம் | 10 |
| திரு பி கா வீரவராசா, அம்மாசமுத்திரம் | 10 |
| திரு இரா புதியவன், வேடசந்தூர் | 10 |
| திரு ஏ வைரவநாதன், செங்கோட்டை | 10 |
| திரு பி மலைச்சாமி, சின்னமனூர் | 10 |
| திரு ரா முத்தையா, பெரியகுளம் | 10 |
| திரு எஸ் ஆர் ஈஸ்வரமூர்த்தி, பெங்களூர் | 10 |
| திரு பி வில்வநாதன், பெங்களூர் | 10 |
| திரு பி குமார், மேற்கு மாம்பலம் | 10 |
| திரு எம் ஏ மாறன், சென்னை | 10 |
| திரு கே எஸ் மணி, சென்னை—23 | 10 |
| திரு டி எம் ஆஜீ சூளை | 10 |
| திரு ஆர் குமார் கொண்டித்தோப்பு | 10 |
| திரு எம் வீரப்பா, சென்னை-2 | 10 |
| திரு கே பி வேலுச்சாமி, பொம்மிடி | 10 |
| திரு ஏ அண்ணாமலை, கடலூர் | 10 |
| திரு ஆர் என் சேகர், இராமியண ஹள்ளி | 10 |
| திரு எஸ். பக்தவச்சலம், மதுராந்தகம் | 10 |
| திரு டி ஏ ரஷித், கடப்பேரி | 10 |
| திரு எஸ் பி சந்திரன் டி பி சாணடோரியம் | 10 |
| திரு எஸ் முருகேசன், மடலாளம், திருப்பத்தூர் | 10 |
| திரு கே துரைசாமி, ஒசூர் | 0 |
| திரு பி தனராஜ் | 10 |
| திரு ஆர் கோபிநாத் சௌகார்பேட்டை | 10 |
| திரு ஏ எஸ் ஜெயா மயிலை | 10 |
| திரு எஸ் அன்பு கொரட்டூர் | 10 |
| திரு ஆர் கம்பதாஸ் நாகப்பட்டினம் | 10 |
| திரு எஸ் ரவி பாண்டிச்சேரி | 10 |
| திரு எஸ் சௌந்தரராசு போளூர் | 10 |
| திருமதி டி வசந்தி என்ற சாந்தி சிதம்பரம் | 10 |
| திரு ஜயாத்துரை நாடார் ஆரல்வாய்மொழி | 10 |
| திரு பாரிசெய்யது அகமது மேலப்பாளையம் | 10 |
| திரு இ காசி விருகம்பாக்கம் | 10 |
| திரு கே வி விஸ்வநாதன், சென்னை-6 | 10 |
| திரு டி சிங்கராஜூ, திருச்சி | 10 |
| திரு ந சுப்பிரமணியன், பூலாம்பட்டி | 10 |
| திரு எம் ஜி ஏழுமலை, சென்னை-84 | 10 |
| திரு ஆர் கண்ணையன், திண்டிவனம் | 8 |
| திரு எம் எஸ் காஜாமுகைதீன், மேலப்பாளையம் | 7 |
| திரு இரா திருப்பதி, திருச்செங்கோடு | 7 |
| திரு ஜே பிரின்ஸ் நிமலதாஸ், (4-ம் வகுப்பு) ஏழாயிரம்பண்ணை | 6 |
| திரு ஏ என் கிருஷ்ணசாமிபுதுப்பெருங்களத்தூர் | 6 |
| திருமதி பி மீனாட்சியம்மன் திருமங்கலம் | 5 |
| திரு ஆர் குணசேகரன் திருச்செங்கோடு | 5 |
| திரு பி இளங்கோவன் சித்தமல்லி | 5 |
| திரு டி எஸ் கருணாகரன் ஆம்பூர் | 5 |
| திரு கே சி கந்தசாமி எளச்சிபாளையம் | 5 |
| திரு டி ஜே பிரபாகரன் ஆம்பூர் | 5 |
| கே ஆனந்தி, உத்தமசோழமங்களம் | 5 |
| திரு அ. பழனிசாமி, இராஜபாளையம் | 5 |
| திரு நா. இரகுநாதன், திருவொற்றியூர் | 5 |
| திரு வி. சங்கர், அம்பல் | 5 |
| திரு எஸ். காந்தமணி, நன்னிலம் | 5 |
| திரு பி. அருணாசலம், இடையன்விளை | 5 |
| திரு பி. கே நாகேந்திரராவ், பரமக்குடி | 5 |
| திரு ஏ கே சுலைமான், பொள்ளாச்சி | 5 |
| திரு என் கோவிந்தசாமி, தலைஞாயிறு | 5 |
| திரு ச இ அப்துல்முனாப். கேட்டை | 5 |
| திரு எஸ் அனந்தகிருஷ்ணன் கோட்டூர் | 5 |
| திரு அ பாலுசாமி திருவாடாணை | 5 |
| திரு ஜி சத்திமூர்த்தி, ஆடுதுறை | 5 |
| திரு கே செல்லத்துரை ஒரத்ததாடு | 5 |
| திரு என் நாராயணமூர்த்தி தஞ்சை | 5 |
| திரு வி கந்தசாமி, புதுச்சத்திரம் | 5 |
| திரு வி எஸ் சாகுல் அமீது, மேலப்பாளையம் | 5 |
| திரு எம் நரசிம்மன், வேலூர் | 5 |
| திரு அ பகவதி, கம்பம் | 5 |
| திரு பி முருகேசன், புத்தூர் | 5 |
| திரு என் பி காதர் மொய்தீன் ரவுத்தர், வருசநாடு | 5 |
| திரு சி முனிகண்ணன், பெல்லூர் | 5 |
| திருமதி அகிலாண்டஸ்வரி அம்மாள் நன்னிலம் | 5 |
| செல்வி வ இந்திரா பட்டுக்கோட்டை | 5 |
| செல்வி என் பி கமலம் எமனேஸ்வரம் | 5 |
| திரு கே எஸ் இமாமுத்தீன் மேலப்பாளையம் | 5 |
| திரு பி சண்முகம் ஈரோடு | 5 |
| திரு ச வீரன் கோட்டைகாடு | 5 |
| திரு ஒய் சரணம்பிள்ளை நெல்லை | 5 |
| திரு கே நடராஜன் பாடி | 5 |
| திரு எஸ் பி வெள்ளகண்ணு மன்னார்பேட்டை | 5 |
| திரு கே சேகர் நெய்வேலி | 5 |
| திரு எம் பழனி விழுப்புரம் | 5 |
| திரு ந முத்துராமன், கோவில்பட்டி | 5 |
| திரு இளையபெருமாள் அரியலூர் | 5 |
| திரு பி பழனிசாமி பெரம்பலூர் | 5 |
| திரு வி ஏ ஸ்ரீனிவாசன், ரெட்ஹில்ஸ் | 5 |
| திரு எஸ் செந்தில்குமார், சிதம்பரம் | 5 |
| திரு ஆர் தென்றல், திருமுட்டம் | 5 |
| திரு ஆர் சத்தியா, திருமுட்டம் | 5 |
| திரு ஏ மேகராஜ், குடியாத்தம் | 5 |
| திரு எஸ் சாமிக்கண்ணு, முள்ளங்குடி | 5 |
| திரு எஸ் சையது சாதிக் பாட்சா | 5 |
| திரு சி. முருகேசன், தாராபுரம் | 5 |
| திரு வி நைனாமலை, கொண்டலாம்பட்டு | 5 |
| திரு பி செல்வராசு, சித்தமல்லி | 5 |
| திரு கே பி ராசேந்திரன், சேலம் | 5 |
| திரு சி குமார இன்பம், திருப்பூர் | 5 |
| திரு பி சுந்தரம், கும்பகோணம் | 5 |
| திரு டி எம் அபிபுல்லாகான், பழனி | 5 |
| திரு ஏ முத்துவேல் முள்ளூர் | 5 |
| திரு கு பார்த்தசாரதி வில்லியனூர் | 5 |
| திரு எம் கண்ணன் திருவாரூர் | 5 |
| திரு என் பழனிச்சாமி மூலனூர் | 5 |
| திரு ஆர் மணி மூலனூர் | 5 |
| திரு என் ராமசாமி மூலனூர் | 5 |
| திரு ஆர் மல்லீஸ்வரன் மூலனூர் | 5 |
| திரு பி கந்தசாமி மூலனூர் | 5 |
| திரு கே மணி சின்னகாம்பட்டு | 5 |
| திரு அய்யன்பெருமாள், மூலனூர் | 5 |
| திரு வேல்மணி, மூலனூர் | 5 |
| திரு சி தண்டபாணி மூலனூர் | 5 |
| திரு எஸ்.எம். அப்துல்காதர், மேலப்பாளையம் | 5 |
| திரு டி எம் மீரான் மைதீன், மேலப்பாளையம் | 5 |
| திரு எஸ்.ஏ. அப்துல்காதர் | 5 |
| திரு பி.வி. கிருஷ்ணன் நாயர், சிங்காநல்லூர் | 5 |
| திரு ஆர் தங்கம், ஆண்டிப்பட்டி | 5 |
| திரு பி பிச்சை திருவினைக்காவல் | 5 |
| திரு மா கடற்கரை, திருவில்லிப்புத்தூர் | 5 |
| திரு சோ சேசாசலம் சென்னை | 5 |
| திரு எஸ் ராஜேந்திரன் பாண்டிச்சேரி | 5 |
| திரு ஏ அந்தோணிசாமி திருச்சி | 5 |
| திரு ஏ மாணிக்கம், திருச்சி | 5 |
| திரு எஸ் விஜயரங்கம் திருவண்ணாமலை | 5 |
| திரு சி பொன்னுசாமி சூரமங்கலம் | 5 |
| திரு த முனுசாமி கீழப்பட்டு செங்கை | 5 |
| திரு ஆ. பெரியசாமி, கடலூர் | 5 |
| திரு கே. ஏ சாகுல்ஹமீது, மேலப்பாளையம் | 5 |
| திருமதி சேனம்மாள்பீவி, மேலப்பாளையம் | 5 |
| திரு வி ஏ ஹாமீம்பிள்ளை. மேலப்பாளையம் | 5 |
| திரு அகமதுமீரான், மேலப்பாளையம் | 5 |
| திரு என் சும்சுதீன், ஹாமீம்புரம், மேலப்பாளையம் | 5 |
| திரு எஸ். எம். முகமதுஅலி, மேலப்பாளையம் | 5 |
| திரு எஸ். பாண்டியன், மதுரைகம்பம் | 5 |
| திரு வீ. சண்முகம், கடலூர் | 5 |
| திரு சி கே நடராசன் | 5 |
| திரு ஏ சுந்தரவடிவேலு சேலம் | 5 |
| திரு பி இளங்கோவன் வேதாரண்யம் | 3 |
| திரு எஸ் தஸ்தகீர் சிதம்பரம் | 3 |
| திரு கே கண்ணன் என்ற சேஷாத்திரி கும்பகோணம் | 3 |
| திரு எஸ் சண்முகம் ஆரணி | 2 |
| திரு வி குஞ்சய்யன் நாகூர் | 2 |
| செல்வி த. சங்கீதா (4ம் வகுப்பு) இறைஞ்சி | 2 |
| திரு எம் ராஜா, (4-ம் வகுப்பு) நாகப்பட்டிணம் | 2 |
| திருமதி எஸ் பாப்பு. மகுடஞ்சாவடி | 2 |
| திரு எம் பாஸ்கரன், எளச்சிபாளையம் | 2 |
| திரு அ ஜோ மரிய ஜெகநாதன், மானாமதுரை | 2 |
| திரு கே ஆர் கமலக்கண்ணன், ஈக்காடி | 2 |
| திருமதி காமாட்சி அம்மாள், உளுந்தூர்பேட்டை | 2 |
| திரு எஸ் மணவாளன், தஞ்சை | 2 |
| திரு பி மலையண்ணன். நாமக்கல் | 2 |
| திரு பி முருகன் சோமநந்தான் | 2 |
| திரு எஸ் மகேஸ்வரன் ராசிபுரம் | 2 |

## ஜவுளிக் கொள்கை: அமைச்சர் அறிவிப்பு

பாட்னா, ஏப். 18- அரசின் புதிய ஜவுளிக் கொள்கை அடுத்த மாத மத்தியில் அறிவிக்கப்படும் என்று மத்திய ஜவுளித் துறை அமைச்சர் சந்திரசேகர் சிங் கூறினார்.

உபயோகிப்போர் நலனைக் கருத்தில் கொண்டு புதிய ஜவுளிக் கொள்கை உருவாக்கப் படுவதாகவும் அமைச்சர் கூறியுள்ளார்.

கடலூர் அருகே

## சிலைதிருட முயன்ற 5 பேர்கைது

கடலூர், ஏப், 18— கடலூர்அருகேபச்சையன் குப்பம் ஊரில் உள்ள கோவிலில் நள்ளிரவு நேரத்தில் லாரியில் 5பேர் வந்து தங்கியிருந்தனர்,

ஆலய ஊழியர்கள் அவர்கள் மீது சந்தேகப் பட்டு போலீசாரிடம் புகார் செய்தனர்.

அந்தக் கோவிலில் இருந்த, சிலைகளை அகற்ற முயற்சிக்கையில் போலீசார் 5 பேரையும் கைது செய்தனர், லாரியும் கைப்பற்றப்பட்டது.

ஏழைகளுக்கு இலவச மின்சாரம் வழங்கும்

# தமிழகத்துக்கு மலிவு விலையில் நிலக்கரி தருக

## நாடாளுமன்றத்தில் ஏ. சி. சண்முகம் வலியுறுத்தல்

புதுடெல்லி, ஏப். 18- ஏழை விவசாயிகளுக்கு இலவச மின்சாரம் வழங்கும் தமிழகத்திற்கு மானயம் அளித்து, மலிவு விலையில் நிலக்கரி வழங்கவேண்டும் என்று நாடாளுமன்றத்தில் கழக உறுப்பினர் ஏ. சி. சண்முகம் வலியுறுத்தினார்.

நாடாளுமன்றத்தில் இரும்பு, நிலக்கரி மற்றும் கனிமப் பொருள் அமைச்சக பட்ஜெட் மீது நடந்த விவாதத்தில் கலந்து கொண்டு கழக நாடாளுமன்றஉறுப்பினர் ஏ. சி. சண்முகம் பேசுகையில் கூறியதாவது:—

வெளிநாடுகளில் இருந்து கனிமப் பொருட்களை இறக்குமதி செய்யும் ஜப்பான்நாடு தொழில் துறையில் அமோகமாக முன்னேறி இருக்கிறது.

'என்னவளம் இல்லை இந்த திருநாட்டில்- ஏன்கையை ஏந்த வேண்டும் வெளிநாட்டில்' என்று எங்களுடைய தலைவர் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். ஒரு திரைப்படத்தில் கூறியிருக்கிறார். அது எந்த அளவுக்கு உண்மை என்பதை நாம் உணர வேண்டும்.

நம்முடைய இந்திய திருநாட்டில் எல்லாவித கனிவளங்களும் மலிந்து கிடக்கின்றன. அதை முறையாக பயன்படுத்தாமல் பொருளாதாரத்தில் மிகவும் பின்தங்கியிருக்கிறோம்.

தமிழகம் அனல்மின் திட்டத்தை நம்பியே உள்ளது. தூத்துக்குடி, பேசின் பிரிட்ஜ், எண்ணூர் அனல் மின் நிலையங்கள்நிலக்கரி மூலம் தான் மின்உற்பத்தி செய்கின்றன.

### இலவச மின்சாரம்

தமிழ்நாட்டில் 1976ம் ஆண்டில் விவசாயிகளுக்கு ஒரு யூனிட் மின்சாரம் 16 பைசாவுக்கு வழங்கப்பட்டது. ஆனால் எங்களுடைய அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக ஆட்சி ஏற்பட்ட பின் யூனிட் ஒன்று 12 பைசாவுக்கு வழங்கப்படுகிறது.

இரண்டரை இலட்சம் ஏழைவிவசாயிகளின் பம்பு செட்டுகளுக்கு இலவச மின்சாரம் வழங்கியிருக்கிறோம்,

லட்சக்கணக்கான குடிசைகளுக்கு இலவச மின்சாரம் வழங்கப்படுகிறது.

நிலக்கரி விலை உயர்ந்துள்ள நிலையிலும், தட்டுப்பாடு அதிகமாக உள்ள போதும் வேகன் கிடைக்காதபிரச்சினை இருந்தும் நாங்கள் சமாளித்து வருகிறோம்.

### மானிய விலையில் நிலக்கரி

இவைகளை எல்லாம் கவனத்தில் கொண்டு தமிழக அரசு மின் உற்பத்திக்குப் பயன்படுத்தும் நிலக்கரிக்கு உண்டாகும் செலவில் பாதியை மத்திய அரசு மானியமாக வழங்க வேண்டும் என்று தமிழக அரசின் சார்பில் கேட்டுக்கொள்கிறேன்.

வடமாநிலங்களில் இருந்து தமிழ் நாட்டிற்கு நிலக்கரியைக் கப்பலில் கொண்டு வர வேண்டியுள்ளது. இதற்காக தமிழக அரசு மூன்று புதிய கப்பல்கள் வாங்க மத்திய அரசிடம் அனுமதி கோரியுள்ளது. ஆனால் ஒரு கப்பலுக்குத்தான் அனுமதி வழங்கப்பட்டுள்ளது. இன்னும் இரண்டு கப்பலுக்கானஅனுமதியை விரைவில் வழங்க வேண்டும்.

நாடு முழுவதும் நிலக்கரி தட்டுப்பாடு உள்ளது. 1985 மார்ச் 31-ந் தேதிய மத்திய அமைச்சகத்தின் ஆண்டறிக்கையில் சுரங்கங்களுக்கடியில் 700 கோடி ரூபாய்க்கான நிலக்கரி வீணாக விரயமாகிக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு வருடமும் கோடிக் கணக்கான ரூபாய்க்கான நிலக்கரி எரிந்து சாம்பலாகிக் கொண்டிருக்கிறது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இப்படி வீணாவதை எந்த வகையிலாவது மத்திய அரசு தடுத்து அவைகள் பயன்படும் வகையில் நடவடிக்கைகள் எடுக்க முன்வரவேண்டும்.

இவ்வாறு ஏ. சி. சண்முகம் எம்.பி.பேசினார்.

# தஞ்சை மாவட்டத்தில் என்ஜினீயரிங் கல்லூரி-விவசாயக் கல்லூரி

## பாப்பா சுப்பிரமணியம் கோரிக்கை

சென்னை, ஏப். 18- தஞ்சை மாவட்டத்தில் ஒரு விவசாய கல்லூரியும் என்ஜினீயரிங் கல்லூரியும் அமைத்துத் தர வேண்டும் என்று சட்டசபையில் கழக உறுப்பினர் பாப்பா சுப்பிரமணியம் கோரிக்கை விடுத்தார்.

சட்டசபையில் கல்வி மான்ய கோரிக்கை மீது பேசுகையில் கழக உறுப்பினர் குத்தாலம் பாப்பா சுப்பிரமணியம் கூறியதாவது:-

இதயதெய்வம் புரட்சித்தலைவர் அவர்கள்மீண்டும் தமிழகத்தினுடையமுதல்மைச்சராக ஆகவேண்டும். அவர்கள் இந்த நாட்டில் உயிர் பெற்று மூன்றாவது பிறவி எடுக்க வேண்டுமென்பதற்காக பலர் 'ஆண்டவனே, இறைவனே எங்களுடைய உயிரை எடுத்துக்கொள், எங்களைக் காத்துக் கொண்டிருக்கிற எங்களுடைய இதய தெய்வம புரட்சித்தலைவரை வாழவை என்று தம்மைத் தாமே அர்ப்பணித்துக் கொண்ட, அந்த தியாக மறவர்களுக்கு இந்த நேரத்திலே என்னுடைய கண்ணீரை காணிக்கை ஆக்குகிறேன்.

அதே போல் இன்னும் பலபேர்கள் ஆண்டவனுடைய சன்னிதானங்களுக்குசென்று தங்களுடையகண்ணீரைசெலுத்தி சிலபேர் தங்களுடைய இரத்தத்தாலே ஆண்டவனை அபிஷேகம் செய்ததை ஆண்டவனே பார்க்கிறார். இன்னும் தமிழகத்தை சோதித்தால் தமிழகத்திலே இருக்கும் கோவில்கள் தரைமட்டம் ஆக்கப்பட்டு, ஆஸ்திகம் அழிந்து போகும்என்பதைஅறிந்த ஆண்டவன் தான் இருக்கிறேன்என்பதைநிரூபிக்க தன்னைத்தானே காத்துக் கொள்ள புரட்சித் தலைவரைகாத்துஇருக்கிறான். இதுதான் வரலாறு. அந்த ஆண்டவனுக்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்வதோடு உலக வரலாற்றிலேயே மருத்துவத்திலே ஒரு மாபெரும் சாதனையைப் புரிந்த அந்த மருத்துவ வல்லுநர்களுக்கும் என்னுடைய நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்றைய தினம் புரட்சித்தலைவர் கொண்டு வந்திருக்கிற இந்த பட்ஜெட்டைப் பார்த்து செய்து காட்ட முடியாதவர்கள், செய்ய திறனற்றவர்கள், உப்பில்லை சப்பில்லை என்றெல்லாம் பல்வேறு வகையில் பேசினார்கள். இப்பொழுது கொண்டு வந்திருக்கிற இந்த பட்ஜெட்டிலே மாட மாளிகைகளிலே, கூட கோபுரங்களிலே அரண்மனை போன்ற வீடும், அம்பாசிடர்காரும் டன்லப், பின்லே ஸ்பென்சர் மெத்தை போன்ற ஆடம்பர சுகங்களோடு வாழ்ந்துகொண்டிருக்கின்றவர்களுக்கு உப்பும் இருக்காது, சப்பும் இருக்காது.

### தென்திசை தமிழர்கள்

ஆனால், உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி, படுக்க பாயின்றி, பஞ்சையாய், பராரியாய்' வக்கற்று, வாழவழியற்று இருக்கின்ற தென்திசை தமிழருக்காகதான் இந்த பட்ஜெட் கொண்டு வரப் பட்டது,

தொன்று தொட்டு வந்து விட்ட வழக்கமான கல்வி முறையை மாற்றி ஒவ்வொருவரும் படிக்கிற நிலையில் ஏதாவது ஒரு பகுதியாக ஒரு தொழிலை கற்று, அதன்மூலமாக தங்களுடைய வாழ்க்கையை தக்க வைத்துக் கொள்ள வேண்டும்.

தங்களுடைய வாழ்க்கையை தாங்களே உருவாக்கிக் கொள்ள வேண்டும் என்பதற்காக புரட்சித்தலைவருடைய அரசு அப்படிப்பட்ட ஒரு நல்ல திட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறது.

புரட்சித்தலைவர் அவர்கள் ஆட்சிக் காலத்தில் ஊராட்சி ஒன்றிய ஆசிரியர்கள் அனைவரும் அரசு ஊழியர்களாக மாற்றப் பட்டார்கள்.

### கொடுமை கொடுமை

தனியார் பள்ளிகளில் இருக்கிற ஆசிரியர்களுக்கு எல்லாம் புரட்சித்தலைவர் அரசு தான் சம்பளம் கொடுக்கிறது. ஆனாலும், அந்த தனியார் துவக்கப்பள்ளி ஆசிரியர்கள் மாற்றாந் தாய்பிள்ளைகளாக நடத்தப்படுகிற கொடுமை இருக்கிறது.

எனவே புரட்சித் தலைவர் அவர்கள் அந்த ஆசிரியர்களை தத்து எடுத்து கொண்டு அந்த தனியார் துவக்கப் பள்ளி ஆசிரியர்களையும் அரசு ஊழியர்களாக மாற்ற வேண்டுமென்று என்னுடைய கோரிக்கையை இந்த நேரத்தில் தெரிவிக்கவிரும்புகிறேன்.

### இஞ்சியும் மஞ்சளும்

அடுத்து என்னுடைய தொகுதியை குறித்து ஒருசில கோரிக்கைகளை எடுத்துச்சொல்லிமுடித்துக் கொள்கிறேன். இஞ்சியும் மஞ்சளும் கொஞ்சி விளையாடும் எங்கள் தஞ்சைத் தரணியில் புதிதாக ஒரு விவசாய கல்லூரியை உருவாக்க வேண்டும் என்று பணிவோடு கேட்டுக் கொள்கிறேன். அதே போல் தஞ்சை மாவட்டத்தில் புதியதாக ஒரு என்ஜினீயரிங்கல்லூரியை உருவாக்க வேண்டும்.

என்னுடைய குத்தாலம் தொகுதியில்ஒரு பாலிடெக்னிக்கும், பெண்களுக்கென்று ஒரு உயர்நிலைப் பள்ளியும் ஏற்படுத்தித்தர வேண்டுமென்று தாழ்மையோடு கேட்டுக்கொள்கிறேன். அதே போல கொடவாசல் பகுதியில் ஐ.டி.ஐ. ஒன்று ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு பாப்பாசுப்பிரமணியம் கூறினார்.

★ தூத்துக்குடி அனல் மின்நிலைய விஸ்தரிப்பு
★ வடசென்னையில் புதிய மின் நிலையம்
★ கடலூரில் அனல் மின் நிலையம் அமைக்க திட்டம் தயாரிப்பு

# 3 ஆண்டிற்குள் தமிழகத்தில் மின் உற்பத்தியில் தன்னிறைவு

## புரட்சித்தலைவர் ஆட்சியின் தீவிர நடவடிக்கைகள்: அமைச்சர் பண்ருட்டியார் தகவல்

வேலூர், ஏப். 18- பல்வேறு புதிய மின் உற்பத்தித் திட்டங்களை புரட்சித்தலைவர் அரசு நிறைவேற்றி வருவதால், அடுத்த இரண்டு மூன்று ஆண்டிற்குள் தமிழகம் மின் உற்பத்தியில் தன்னிறைவு பெறும் என அமைச்சர் பண்ருட்டியார் கூறினார்

ஆரணியில், 230 கிலோ வாட் சக்தி கொண்ட மின் துணை நிலையத்தை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் திறந்து வைத்தார்.

நிகழ்ச்சியில்பேசுகையில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறிய தாவது:-

புரட்சித்தலைவர்ஆட்சியில் மின் உற்பத்தியைப் பெருக்கபல்வேறு திட்டங்களை நிறைவேற்றி வருகிறோம்.

தூத்துக்குடி அனல்மின் நிலையத்தில், 420 மெகா வாட் திறன் கொண்ட இரண்டு புதிய பிரிவுகள் அமைக்கப்படும்.

வட சென்னையில் மேலும் ஒரு அனல் மின் நிலையம் அமைக்கப் படவுள்ளது.

இந்த இரண்டு திட்டங்களுக்கும் இன்னும் இரண்டொரு மாதங்களில் மத்திய அரசின் அனுமதி கிடைத்து விடும் என எதிர்பார்க்கப்படுகிறது.

கடலூரில் புதிதாக அனல் மின் நிலையம் அமைப்பது பற்றி திட்டம் தயாரிக்கப்பட்டு வருகிறது.

### அன்றைய நிலை

1977ல் தமிழகம் தனது மின்தேவைக்கு மற்ற மாநிலங்களையே நம்பி யிருந்தது.

அதன் பிறகு கழக அரசின் தீவிர நடவடிக்கைகளின் விளைவாக மின் உற்பத்தியை பெருமளவிற்கு அதிகரித்துள்ளோம்.

அடுத்த 2 அல்லது 3 ஆண்டிற்குள் தமிழகம் மின் உற்பத்தியில் தன்னிறைவுபெறும் அளவிற்கு மின் உற்பத்தித் திட்டங்களை மத்திய அரசின் ஒத்துழைப்போடு நிறைவேற்றி வருகிறோம்.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டிராமச்சந்திரன் கூறினார்.

---

மாறிவரும் சூழ்நிலையை மனதிற் கொண்டு

# தொழிலாளர் நல சட்டங்களை மாற்ற வேண்டும்

## அமைச்சர் கே. ஏ. கே. கருத்து

மதுரை, ஏப். 18- மாறிவரும் சூழ்நிலையை மனதிற் கொண்டு தொழிலாளர் நலச்சட்டங்களை மாற்ற வேண்டுமென்று தொழிலாளர் நல அமைச்சர் கே.ஏ.கே. கூறினார்,

மதுரை, ராமநாதபுரம் காமராஜர், பசும் பொன் முத்துராமலிங்கம் ஆகிய மாவட்டங்களைச்சேர்ந்த தொழிற்சங்க தலைவர்களின் மாநாடுமதுரையில் நடைபெற்றது. இதில்பங்கேற்று தமிழக தொழிலாளர் நல அமைச்சர்கே.ஏ.கே. பேசினார்.அவர் கூறியதாவது;-

தொழிலாளர் நலச் சட்டங்களும், தொழில் கருத்து வேறுபாடு சட்டம் போன்றவையும் வெகுகாலத்திற்கு முன் ப இயற்றப்பட்டவை.இவை தற்போதுள்ள நிலைக்கு ஏற்றவைகளாக இல்லை.

எனவே மாறிவரும் சூழ்நிலையக் கருத்தில் கொண்டு புதிய தொழிலாளர் நலச் சட்டங்களை இயற்றவேண்டும்.

அடுத்த மாதம் 11ந் தேதி மாநில தொழிலாளர் நல அமைச்சர்களின் கூட்டம் டெல்லியில் நடைபெறுகிறது. இந்தக் கூட்டத்தில் தொழிலாளர் நல சட்டங்களுக்கு எந்த வகையில் திருத்தங்கள் கொண்டு வரலாம், என்பது பற்றியும் புதிய தொழிலாளர் நலக் கொள்கை பற்றியும் விவாதிக்கப்பட வுள்ளது.

குழந்தைகளைவேலைக்கு அமர்த்துவது குறித்து தொழிலாளர் அமைப்பு சில திருத்தங்களை கூறியுள்ளது.தமிழகஅரசு அவைகளை ஏற்கனவே அமல்படுத்தியுள்ளது,

தமிழக அரசைப் பொறுத்தவரை தொழிலாளர் நலம் காக்கும் அரசாகவேதான் இருக்கும்.

மாநிலம் தழுவிய அளவில் அடுத்த மாதம் 2-ந தேதி கோவையில் தொழிலாளர் பிரச்சினை குறித்து விவாதிக்க மாநாடு நடைபெறுகிறது. இதில் இ.எஸ்.ஐ. போன்ற பிரச்சினைகள் குறித்தும் விவாதிக்கப்படும்.

தொழில் கோர்ட்டுகளில் தேங்கிக் கிடக்கும் வழக்குகளை விரைவில் பைசல் செய்ய தொழிற்சங்கத் தலைவர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளார்கள்.

இவ்வாறு அமைச்சர் கே. ஏ. கே, கூறினார்.

---

## இந்திய தமிழ் எழுத்தாளர் சங்க தலைவராக நா. பா. தேர்வு

சென்னை, ஏப். 18— இந்திய தமிழ் எழுத்தாளர் சங்கத்தலைவராக "தீபம்" நா. பார்த்தசாரதி தேர்ந்தெடுக்கப்பட்டார். பொருளாளராக பி. வி. ராமகிருஷ்ணன் (பி. வி. ஆர்.) தேர்ந்தெடுக்கப் பட்டார்.

---

## வீட்டு வசதி வாரியத் தலைவராக திருப்பூர் மணிமாறன் நியமனம்

சென்னை, ஏப், 18– வீட்டு வசதி வாரியத்தின் புதிய தலைவராக திருப்பூர் மணிமாறன் நியமிக்கப்பட்டுள்ளார்,

தமிழ் நாடு வீட்டு வசதி வாரியத்தின் தலைவராக இதுவரை ஏ. செல்லையா இருந்து வந்தார்.

அவர் தனது பதவியை ராஜினாமா செய்து விட்டார்.

அவரது ராஜினாமாவை தமிழக அரசு ஏற்றுக் கொண்டது.

வீட்டுவசதி வாரியத்தின் புதிய தலைவராக திருப்பூர் மணிமாறனை தமிழக அரசு நியமித்துள்ளது.

இதற்கான உத்தரவை தமிழக அரசு பிறப்பித்துள்ளது.

---

மராட்டிய மாநில

## தற்காலிக ஆளுநர் பதவி ஏற்பு

பம்பாய், ஏப். 18— பம்பாய் உயர்நீதிமன்ற தலைமை நீதிபதி கே. மாதவரெட்டி மராட்டிய மாநிலத்தின் தற்காலிக ஆளுநராகப் பதவியேற்றார். இதுவரை மராட்டிய ஆளுநராக இருந்த ஐ எச் லத்தீப் பிரான்ஸ் நாட்டுக்கான இந்தியத் தூதராக நியமிக்கப்பட்டுள்ளார்.

---



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34 Nelson Manickam Road MADRAS—600 029.

# திருச்செந்தூர் நாடாளுமன்ற தொகுதி

## வாக்காள பெருமக்களுக்கு

### மாண்புமிகு டாக்டர்

# புரட்சித்தலைவர் அவர்களின்

# வேண்டுகோள்



என்னை வாழவைக்கும் தெய்வங்களாகிய தாய்மார்களே !
என்னை வழி நடத்தும் பெரியவர்களே....
என் ரத்தத்தின் ரத்தமான உடன் பிறப்புகளே....

24-4-1985 அன்று நடைபெற உள்ள இடைத்தேர்தலில் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக ஆதரவு பெற்ற

இந்திரா காங்கிரஸ் வேட்பாளர்

## திரு. தனுஷ்கோடி ஆதித்தன்

அவர்களுக்கு

## "கை" சின்னத்தில் வாக்களிக்குமாறு

உங்களை எல்லாம் நேரில் சந்தித்து கேட்டுக் கொள்ள பெரிதும் விரும்பினேன். எனினும் நீண்ட தூர பயணங்களை தவிர்க்க வேண்டுமென மருத்துவர்கள் கண்டிப்பாக தெரிவித்துவிட்டனர். எனவே எனது இந்த வேண்டுகோளை நேரில் வந்து உங்கள் ஒவ்வொருவரிடமும் விடுகின்ற அன்பு அழைப்பாகவே கருதிடுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

கடந்த பொதுத் தேர்தலில் தமிழக வாக்காள பெருமக்கள் அளித்த வெற்றி அமெரிக்காவில் சிகிச்சை பெற்று வந்த எனது உடல் நிலையிலும் மன நிலையிலும் மிகப்பெரிய முன்னேற்றத்தை ஏற்படுத்தியது. அது போல் திருச்செந்தூர் நாடாளுமன்ற தொகுதி இடைத்தேர்தலில் நீங்கள் அளிக்கின்ற வெற்றி எனக்கு மேலும் உற்சாகத்தை அளித்து என் பணிகளில் என்னை மேலும் ஊக்குவிக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் இந்திரா காங்கிரஸ் கட்சிக்கும் கடந்த பொதுத் தேர்தலில் தமிழக மக்கள் அளித்திட்ட ஆதரவு அவற்றின் திட்டங்களுக்கும் - கொள்கைகளுக்கும்தான் என்பதை மீண்டும் எடுத்துக் காட்ட திருச்செந்தூர் நாடாளுமன்ற தொகுதி வாக்காளராகிய உங்களுக்கும் ஒரு வாய்ப்பு கிட்டியுள்ளது.



இந்திய ஒற்றுமையை கட்டிக் காக்கவும் வளர்ச்சி திட்டங்களை தடையின்றி நிறைவேற்றவும், முற்போக்கான பாதையில் நாடு தொடர்ந்து முன்னேறவும், மத்திய-மாநில அரசுகளிடையே சுமுகமான உறவு மேம்படவும் திருச்செந்தூர் நாடாளுமன்ற இடைத் தேர்தலில்

இந்திரா காங்கிரஸ் வேட்பாளர்

திரு. **தனுஷ்கோடி ஆதித்தன்** அவர்களுக்கு

நான நேரில் வந்து வேண்டிக் கொண்டதாகவே கருதி

"கை" சின்னத்தில் வாக்களிக்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

அன்பன்

சென்னை
18-4-85.

## எம்.ஜி.ராமச்சந்திரன்

வெளியீடு: தலைமைக் கழகம், அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக்கழகம்.